4th July 1962]

(உ) ரிஜிஸ்டர் செய்துகொள்வதற்குரிய நடைமுறைகள் என்னென்ன?

THE HON. SRIMATHI JOTHI VENCATACHELLUM : (a) Yes, Sir;

(b) None at present; and

(c) Does not arise.

*Drainage scheme for Kandaparichan canal*

*119 Q.—SRI A. K. SUBBIAH : Will the Hon. the Minister for Agriculture be pleased to state—

(a) when the drainage scheme for Kandaparichan canal in Tiruthuraipundi taluk, Thanjavur district, was launched;

(b) the amount sanctioned for the scheme;

(c) whether the scheme has been completed; and

(d) if not, the reasons therefor?

**கனம் திரு. பூ. கக்கன்:** (அ) கொந்தப்பரிசான் ஆற்றுக்கு குறுக்கே அணை கட்டும் திட்டமானது 1958-ம் ஆண்டு எப்ரல் மாதம் துவக்கப்பட்டது.

(இ) இதற்கு எஸ்டிமேட் ரூ. 4,82,400.

**(உ) இல்லை. 30—6—1962-க்குள்ளே** இதை நிறைவேற்ற திட்டமிடப்பட்டிருக்கிறது.

(எ) ஜாம்பவான்ஓடை வில்லேஜில் நில ஆர்ஜிதம் செய்ய வேண்டியிருக்கிறது. அதனால்தான் காலதாமதம். அது இன்னும் முடியவில்லை. அதுதான் முக்கியகாரணம். இருந்தாலும், 'குலோஷர் பீரியடிற்குள்' இதை முடித்து நல்ல முறையில் நிறைவேற்றுவதற்கு ஏற்பாடு செய்யப்படும்.

**திரு. மீ. கலியாணசுந்தரம்:** கனம் அமைச்சர் அவர்கள் கூறிய தகவலிலிருந்தும், எனக்கு கிடைத்திருக்கக்கூடிய தகவலிலிருந்தும், கால்வாய் சம்பந்தப்பட்ட மட்டில் வெட்டி பூர்த்தியாகி 7 ஆண்டு காலமாகிவிட்டதே, வடிகால் வெட்டுவதற்குத்தான் கால தாமதம் ஆகிறது. ஜாம்பவான்ஓடையில் வடிகாலுக்குத் தேவையான நிலம் மிகவும் செல்வாக்குள்ளவர் கையில் இருப்பதினால், 7 ஆண்டுகள் தாமதம் ஆகி, 2,000 ஏகர் மகசூல் நஷ்டம் அடைகிறது என்பது உண்மையா?

**கனம் திரு. பூ. கக்கன்:** செல்வாக்குள்ளவர் கையில் நிலம் இருக்கிறதா என்று எனக்குத் தெரியாது. இருந்தாலும், எவ்வளவு செல்வாக்குள்ளவர் நிலமாக இருந்தாலும், அதை ஆர்ஜிதம் பண்ண அரசாங்கம் பின்வாங்காது என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

**திரு. மீ. கலியாணசுந்தரம்:** சம்பந்தப்பட்ட நிலத்தை ஆர்ஜிதம் செய்வதற்காக இதுவரை எடுக்கப்பட்ட நடவடிக்கைகள் என்னென்ன என்று அறிவிக்க முடியுமா?

[4th July 1962

**கனம் திரு. பூ. கக்கன் :** அநேகமாக எல்லா நடவடிக்கைகளும் எடுக்கப்பட்டிருக்கின்றன. திட்டமே இந்த 'குளோஷர் பீரியடிற்குள்' முடிந்துவிடும் என்று சொல்லுகிறார்கள். அநேகமாக எல்லா நடவடிக்கைகளும் எடுக்கப்பட்டிருக்கின்றன.

*Veterinary College*

* 120 Q.—SRI M. KALYANASUNDARAM : Will the Hon. the Minister for Agriculture be pleased to state—

(a) whether there is any proposal to open an additional Veterinary College; and

(b) if so, the details thereof?

THE HON. SRI P. KAKKAN : (a) Yes, Sir; and

(b) Details of the proposal have not yet been settled.

*Entertainment tax (surcharge)*

* 121 Q.—SRI V. KRISHNAMOORTHY : Will the Hon. the Chief Minister be pleased to state—

(a) whether there is any proposal to withdraw the powers conferred on local bodies to levy surcharge on entertainments taxes; and

(b) if so, the reasons therefor?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) No such proposal is just now under consideration of Government; and

(b) Does not arise.

**திரு. வெ. கிருஷ்ணமூர்த்தி :** ஸ்தல ஸ்தாபனங்களுக்கு சர் சார்ஜ் விதிக்கின்ற உரிமை கொடுத்திருக்கிற காரணத்தினால், ஒரே சினிமாவுக்கு பல பகுதிகளிலே பல விதமாக டிக்கெட் விலைகள் அமைந்திருப்பதால், ஏழைகளும் மற்றவர்களும் கஷ்டத்திற்கு உள்ளாகிறார்கள். அதனால் அதை ஒருமுகப்படுத்தும் வகையில் பஞ்சாயத்து யூனியன், முனிசிபாலிடிகளுக்கு கொடுத்திருக்கும் அதிகாரத்தை ரத்து செய்துவிட்டு, இது விஷயமாக ஏதாவது ஒரு 'யுனிபாரம்' சட்டத்தை கொண்டுவர சர்க்கார் முன்வருமா என்று அறியவிரும்புகிறேன்.

**கனம் திரு. எம். பக்தவத்சலம் :** இந்த அதிகாரம் ஸ்தல ஸ்தாபனங்களுக்கு அளிக்கப்பட்டது. இந்த மன்றத்தில் நிறைவேற்றப்பட்ட ஒரு சட்டத்தினால். ஸ்தல ஸ்தாபனங்களுக்கு அளிக்கப்பட்டிருக்கிற அதிகாரங்களை எடுத்துவிடும் விஷயத்தில் நாம் நினைத்தமாதிரி செய்வது முறையல்ல. ஆகையினால் அரசாங்கத்திற்கு அந்த உத்தேசம் இல்லை என்று சொன்னேன்.

*Medical Colleges (admissions)*

* 122 Q.—SRI V. S. S. MANI : Will the Hon. the Minister for Health be pleased to state whether the Government propose to reserve any seats for Science Graduates in regard to admission to Medical Colleges.

THE HON. SRIMATHI JOTHI VENCATACHELLUM : No, Sir.